தேவி! இரண்டாகப் பிளந்து என்னை மூடிக்கொள் ளேன்" என்று மனமார வேண்டினாள். அவளுடைய பார்வை ஏக்கத்துடன் ராம்மோஹன் பக்கம் சென்றது.

ராம்மோஹன் ஓடிவந்து ரமாயியைத் தூக்கி, அறைக்கு வெளியே தள்ளினான். அரசன் கோபத் துடன், "மோஹன்! என் எதிரேயா உன் கொற் றம்?" என்றான்.

"மகாராஜா! நானா கொற்றம் அடிக்கிறேன்? உங்கள் அரசி - என் தாயை - அவன் அவமானம் செய்தான். இது மட்டுமல்ல. மொட்டையடித்துச் சாணநீரைத் தலையில் ஊற்றி ஊரைவிட்டு விரட்டு வேன். இல்லாவிட்டால், என் பெயர் ராம்மோஹன் அல்ல" என்று சொல்லும்போது அவனுடைய உதடுகள் துடித்தன.

அரசன் மோஹனை அதட்டினான். "யார் என் அரசி? அவளை எனக்குத் தெரியாது" என்றான்.

விபாவின் முகம் மாறியது. வாயைத் தலைப்பி னால் மூடிக்கொண்டாள். கால்கள் வெட வெட வென்று நடுங்க, அவள் மயங்கிக் கீழே விழுந்தாள். மோஹன் கைகூப்பி, "மகாராஜா! நான்கு தலை முறையாக உன் வம்சத்துக்கு உழைத்தேன். உன்னைச் சிறு வயது முதல் வளர்த்தேன். இன்று என் தாயை நீ அவமானம் செய்தாய்! உன் ராஜ லக்ஷ்மியை நாட்டை விட்டு ஓட்டினாய். நானும் உன் வேலையை விட்டேன். என் தாய்க்குப் பணிவிடை செய்து வாழ்வைக் கடத்துவேன். பிச்சையெடுத் தாகிலும் உண்பேனே தவிர, உன் அரண்மனைப் படியையும் மிதிக்கமாட்டேன்" என்றான். "வா,

அம்மா! சீக்கிரம் வா. ஒரு கணமும் இங்கே நிற்க வேண்டாம்" என்று அவன் விபாவைத் தூக்கி, வாயிலில் நின்ற பல்லக்கு ஒன்றில் வைத்து, அப்படியே தோணிக்கு அழைத்துவந்தான்.

விபா உதயனுடன் காசிக்குச் சென்றாள். அங்கே தானம், தியானம், தெய்வ பூஜை, அண்ணனுக்கும் அதிதிகளுக்கும் பணிவிடை முதலியன செய்து தன் மிகுதி நாட்களைக் கழித்தாள். ராம்மோஹன் சாகும் வரையில் அவர்களுடனேயே இருந்தான். சீதாராமன் தன் குடும்பத்துடன் உதயனிடம் வந்துசேர்ந்தான்.

சந்திரத்வீபத்தில் விபாவின் தோணி வந்து நின்ற துறைக்கு இன்றும் அவள் பெயர் நிலைத்திருக்கிறது.



முற்றும்



# எரி நட்சத்திரம்

## வி. ஸ. காண்டேகர்

கா. ஸ்ரீ. ஸ்ரீ.
மொழிபெயர்த்தது

அவள் பெயர் தாரா; ஆனல் அவளுடைய தகப்பனர் அவளை உல்கா என்று அழைத்தார். அவள் வாழ்க்கை முழுவதும் எரி நட்சத்திரத்தைப் போலத்தான். வசந்தன், மாணிக்கராவ், சந்திரகாந்தன் பண்டிதர் ஆகிய இத்தனை பேரும் அவளுடைய வாழ்க்கைக்கு அநுபவத்தை உண்டாக்கியவர்கள். ‘ அடுத்த தலைமுறையில் வரும் பெண் இதைவிட முன்னல் அடியெடுத்து வைப்பாள்’ என்கிருர் அவளுடைய தகப்பனர். அவள் அப்படி என்ன புரட்சி செய்தாள்? எப்படிச் செய்தாள் ? என்பது கதை.

நாவலினிடையே மின்னல் வீச்சுப்போலச் சடாரென்று வீசி அறிவுக்கு விளக்கம் கொடுக்கும் தத்துவ தரிசனம் காண்டேகருடைய நூல்களின் தனிச் சிறப்பு. ‘துளசி தெய்வமாம்; மல்லிகை, செவ்வந்தி, சண்பகம் முதலிய யாவும் கொடிகளாம்! ஜனங்களுக்கு ஒன்றுமே பலன் கொடுக்காமல், அதற்கு மாருக அவர்களிடமிருந்து தனக்குப் பூஜை மட்டும் பெற்றுக்கொள்கிறதே, அது தெய்வம். பழங்கள் இனிமையானவை; பூக்கள் அழகானவை. ஆனல் எந்த மரங்களில் இவை உண்டாகின்றனவோ, அந்த மரங்களை யாரும் பூஜிப்பதில்லை! இப்படி ஆயிரக்கணக்கான மணிவாசகங்கள்.

காண்டேகரின் மூல நூலா? அது உங்களுக்குத் தேவையில்லை கா. ஸ்ரீ. ஸ்ரீ. யின் “ மொழிபெயர்ப்பைப் படியுங்கள் ” என்று அறிஞர்கள் கூறும்வண்ணம் அவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது மொழிபெயர்ப்பு.

காகிதம், அச்சுக்கலை, பைண்டிங் யாவும் உயர்தரம்

எரி நட்சத்திரம் அல்லயன்ஸ் வெளியீடு

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை - 4